# ॥ अद्वैतानुभूतिः ॥

# அத்வைதானுபூதி

(1)

अहमानन्दसत्यादिलक्षणः कवलः शिवः ।
सदानन्दादरूपं यत्तेनाहमचलोऽद्वयः ॥

அஹமானந்த ஸத்யாதிலக்ஷண: கேவல: சிவ: ।
ஸதானந்தாதி ரூபம் யத்தேநாஹமசலோऽத்வய: ॥

பெருமகிழ்ச்சி - ஸத்யம் - என்றெல்லாம் குறிப்பிடும் சிவம் ஒன்றே நான். எது ஆனந்தம் - ஸத்யம் - என்று கூறப்படுகிறதோ அது பற்றியே 'நான்' என்ற ஒன்றும் அசையாத இரண்டற்ற பரம் ஆகும்.

(2)

अक्षिदोषाद्यथैकोऽपि द्वयवद्भाति चन्द्रमाः ।
एकोऽप्यात्मा तथाभाति द्वयवन्मायया मृषा ॥

அக்ஷிதோ ஷாத்யதைகோऽபி த்வயத்பாதி சந்த்ரமா: ।
ஏகோऽப்யாத்மா ததா பாதி த்வயத் மாயயா ம்ருஷா ॥

சந்திரன் ஒருவனே எனினும், கண்ணின் குற்றத்தால் இரண்டு சந்திரர்கள் போல காண்கிறது. அதுபோலவே ஆத்மா ஒன்றே எனினும் மாயையால் - பொய்யாக - இரண்டுபோல தோன்றுகிறது.

(3)

अक्षिदोषविहीनानामेक एव यथा शशी ।
मायादोषविहीनानामात्मैवैकस्तथा सदा ।

அக்ஷிதோஷவிஹீநாநாம் ஏக எவ யதா சசீ।
மாயாதோஷவிஹீநாநாம் ஆத்மைவைக: ததாஸதா ॥

கண்ணில் குற்றமில்லாதவருக்கு எவ்வாறு சந்திரன் ஒருவனே எனத் தோன்றுகிறதோ அவ்வாறே மாயா தோஷம் நீங்கியவருக்கு ஆத்மா எப்பொழுதும் ஒன்றேதான் தோன்றும்.

(4)

द्वित्वं भात्यक्षिदोषेण चन्द्रे स्वे माययाजगत् ।
द्वित्वं मृषा यथा चन्द्रे मृषा द्वैतं तथाऽत्मनि ।।

த்வித்வம் பாத்யக்ஷிதோஷேண சந்த்ரே ஸ்வே மாயயா ஜகத் ।
த்வித்வம் ம்ருஷா யதாசந்த்ரே ம்ருஷா த்வைதம் ததாऽத்மநி ॥

கண்ணில் தோஷத்தால் சந்திரன் இரண்டு போல் தோன்றுகிறதே அதுபோல் ஆத்மாவில் மாயையால் உலகம் வேறானதாகத் தோன்றுகிறது. இரண்டு என்பது சந்திரனில் பொய்யானதுபோல ஆத்மாவிலும் இரண்டு என்பது பொய்யானதே.

(5)

आत्मनः कार्यमाकाशो विनात्मानं न संभवेत् ।
कार्यस्य पूर्णतासिद्धा किं पुनः पूर्णतात्मनः ।।

ஆத்மந: கார்யமாகாச: விநாऽऽத்மாநம் ந ஸம்பவேத் ।
கார்யஸ்ய பூர்ணதாஸித்தா கிம் புந: பூர்ணதாऽऽத்மந: ॥

ஆத்மாவின் மூலம் தோன்றியது ஆகாசம். ஏனெனில் ஆத்மா இல்லையெனில் ஆகாசம் தோன்ற முடியாது. ஆகாசமோ பூர்ணமானதாக ஏற்கப்படுகிறது. எனின் காரணமான ஆத்மா பூர்ணமானது எனச் சொல்ல வேண்டுமா?

(6)

कार्यभूतो यथाकाश एक एव न हि द्विधा ।
हेतुभूतस्तथात्मायमेक एव विजानतः ।।

கார்ய பூதோ யதாऽऽகாச ஏகஏவ நத்விதா ।
ஹேதுபூத ஸ்ததாऽऽத்மாவுயம் ஏக ஏவ விஜாநத: ॥

ஆத்மாவின் படைப்பான ஆகாசம் ஒன்றேதான். இரண்டுவிதமில்லையானது போல் காரணமாக அமைந்த ஆத்மாவும் ஒன்றேதான் என அறிவாளிக்கு விளங்கும்.

(7)

एकोऽपि द्वयवद्भाति यथाकाश उपाधितः ।
एकोऽपि द्वयवत्पूर्णस्तथात्मायमुपाधितः ॥

ஏகோऽபித்வய வத்பாதி யதாऽऽகாசஉபாதித:।
ஏகோऽபித்வய வத்பூர்ண: ததாத்மாயமுபாதித:॥

ஆகாயம் கடம், மடம் என்ற குறிப்பின் காரணமாக இரண்டாகத் தோன்றுவதுபோல, பூர்ணமான ஆத்மா ஒன்றே எனினும் குறிப்பிற்காக இரண்டு போல தோன்றுகிறது.

(8)

कारणोपाधिचैतन्यं कार्यसंस्थचितोऽधिकम् ।
न घटाभ्रान्मृदाकाशः कुत्रचिन्नाधिकोभवेत् ॥

காரணோபாதி சைதந்யம் கார்யஸம்ஸ்தசிதோऽதிகம்।
ந கடாப்ராத் ம்ருதாகாச: குத்ரசித் நாதிகோ பவேத்॥

சாஸ்திரங்களில் காரண - உபாதி என்றும், கார்ய - உபாதி என்றும் கூறுவதுண்டு. அவற்றில் கார்ய - உபாதி உணர்வைக் காட்டிலும் காரண - உபாதி உணர்வு மேலானது என்பதும் உண்மையானதே. குடத்திற்கு காரண - உபாதியான மண் என்பது சீரியதே. அதாவது கடாகாசத்தை விட ம்ருதாகாசம் பெரிது என்பதில் சந்தேகமில்லை.

(9)

निर्गतोपाधिराकाश एक एव यथा भवेत् ।
एक एव तथाऽऽत्मायं निर्गतोपाधिकःसदा ॥

நிர்கதோபாதிராகாச: ஏக எவ யதாபவேத்।
ஏக ஏவ ததாऽऽத்மாऽயம் நிர்கதோபாதி கஸ்ஸதா॥

கடம், மடம் என்ற சிறு குறிப்பு ஏதுமில்லாதபொழுது அது பற்றிய ஆகாசம் எவ்வாறு ஒன்றேதானோ, அவ்வாறே குறிப்பு ஏதுமில்லாதபொழுது ஆத்மாவும் ஒன்றேதான்.

## (10)

आकाशादन्य आकाश आकाशस्य यथानहि ।
एकत्वादात्मनो नान्य आत्मासिद्ध्यति चात्मनः ॥

ஆகாசாதன்ய ஆசாக: ஆகாசஸ்ய யதா நஹி।
ஏகத்வாதாத்மநோ நான்ய ஆத்மாஸித்யதி சாத்மன:॥

ஆகாசனத்தின்று வேறுபட்ட ஆகாசம் இல்லை என்பது போல், ஒன்றேயான ஆத்மாவினின்று வேறுபட்ட ஆத்மாவும் நிலைநிறுத்தப்பட மாட்டாதே!

## (11)

मेघयोगाद्यथानीरं करकाकारतामियात् ।
मायायोगात्तथैवात्मा प्रपञ्चाकारतामियात् ॥

மேக யோகாத் யதா நீரம் காரகா காரதாமியாத்।
மாயா யோகாத் ததைவாத்மா ப்ரபஞ்சாகாரதா மியாத்॥

சாதாரண மழை நீர் மேகத்தினுள்ளிருந்து ஆலங்கட்டி யாவது போல், ஆத்மாவும் மாயையுடன் இணைந்து நிற்கும் பொழுது இந்த பிரபஞ்சமாகப் பரிணமிக்கிறது.

## (12-13)

वर्षोपल इवाभाति नीरमेवाभ्रयोगतः ।
वर्षोपलविनाशेन नीरनाशो यथा नहि ॥

आत्मैवायं तथा भाति मायायोगात्प्रपञ्चवत् ।
प्रपञ्चस्य विनाशेन स्वात्मनाशो न हि क्वचित् ॥

வர்ஷோபல இவாபாதி நீரமேவா ப்ரயோகத:।
வர்ஷோபல நாசேந நீரநாசோ யதா நஹி॥

ஆத்மை வாயம் ததா பாதி மாயாயோகாத் ப்ரபஞ்சவத்।
ப்ரபஞ்சஸ்ய விநாசேந ஸ்வாத்ம நாசோ நஹிக்வசித்॥

மேகத்தின் இணைப்பில் நீரானது ஆலங்கட்டியாக மாறுவதும், அந்த ஆலங்கட்டி மாயும்பொழுது தண்ணீர் மாய்வதில்லை என்பதும் போல மாயையுடன் இணைந்தபொழுது இதே இந்த ஆத்மா, ப்ரபஞ்சம்போல பரிணமித்து, பின் பிரபஞ்சம் அழியும்பொழுது அதுவே அழியாமலிருப்பதும் இயற்கையன்றோ!

**(14)**

**जलादन्य इवाभाति जलोत्थो बुद्बुदो यथा ।**
**तथाऽऽत्मनः पृथगिव प्रपञ्चोऽयमनेकधा ॥**

ஜலாதன்ய இவாபாதி ஜலோத்தோ புத்புதோ யதா।
ததாऽऽத்மந: ப்ருதகிவ ப்ரபஞ்சோऽய மநேகதா॥

நீரில் தோன்றிய குமிழி, நீரில் நின்று வேறானதாகத் தோன்றுவது போல், பலவாறாக அமைந்த இந்த ப்ரபஞ்சமும் ஆத்மாவினின்று வேறானதுபோல் தோன்றும்.

**(15)**

यथा बुद्बुदनाशेन जलनाशो न कर्हिचित् ।
तथाप्रपञ्चनाशेन नाशः स्यादात्मनो न हि ॥

யதா புத்புத நாசேந ஜலநாசோ ந கர்ஹிசித்।
ததா ப்ரபஞ்சநாசேந நாச: ஸ்யாத் ஆத்மநோ நஹி॥

குமிழ் மாய்ந்து போனாலும் தண்ணீர் மாய்வதில்லையே! அதுபோல் ப்ரபஞ்சம் அழிந்தாலும், ஆத்மா அழிவதில்லை.

**(16)**

अहिनिर्ल्वयनीजातः शुच्यादिर्नाहिमाप्नुयात् ।
तथा स्थूलादिसंभूतः शुच्यादिर्नाप्नुयादिमम् ॥

அஹிநிர்ல்வயநீஜாத: சுச்யாதி: நாஹிமாப்நுயாத்।
ததாஸ்தூலாதி ஸம்பூத: சுச்யாதி: நாப்நுயா திமம்॥

நாகம் உரித்த சட்டையில் உண்டான வெண்மை முதலியன நாகத்தைச் சாராது போல, ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரண சரீரங்களிலுள்ள வெண்மை முதலிய குணங்கள் ஆத்மாவைச் சாராது.

(17)

त्यक्तां त्वचमहिर्यद्वदात्मत्वेन न मन्यते ।
आत्मत्वेन सदा ज्ञानी त्यक्तदेहत्रयं यथा ॥

த்யக்தாம் த்வசமஹிர்யத்வத் ஆத்மத்வேந நமந்யதே।
ஆத்மத்வேந ஸதா ஜ்ஞாநீ த்யக்ததேகத்ரயம் ததா ॥

ஸர்பம் தனது உடலிலிருந்து உரித்த சட்டையை (மேல்தோலை) தனது உடலாக (தானாக) எண்ணுவதில்லை. அதுபோல் ஜ்ஞானியானவன் ஸ்தூல-சூக்ஷ்ம-காரண சரீரங்களை விட்ட பின் ஆத்மாவாக எண்ணுவதில்லை.

(18)

अहिनिर्ल्वयनीनाशादहेर्नाशो यथा नहि ।
देहत्रयविनाशेन नात्मनाशस्तथा भवेत् ॥

அஹிநிர்ல்வயநீ நாசாத் அஹேர்நாசோயதா நஹி।
தேஹத்ரய விநாசேந நாத்மநாசஸ்ததா பவேத் ॥

மேலுரிச்சட்டை நீங்கியதால் ஸர்பமே அழிவ தில்லையே! அதுபோல் மூன்று வித சரீரங்கள் அழிந்தாலும் ஆத்மா அழிவதில்லை.

(19)

तक्रादिलवणोपेतमज्ञैर्लवणवद्यथा ।
आत्मा स्थूलादिसंयुक्तो दृश्यते स्थूलकादिवत् ॥

தக்ராதி லவணோபேத மஜ்ஞைர் லவணவத்யதா।
ஆத்மா ஸ்தூலாதி ஸம்யுக்தோ த்ருச்யதே
ஸ்தூலகாதிவத் ॥

உப்பு கரிக்கும் மோர் முதலியவற்றை சாமான்யர்கள் உப்பாகவே நினைக்கிறார்கள். அதுபோல் ஸ்தூல - சூக்ஷ்ம - காரண சரீரங்களோடு சேர்ந்திருப்பதால் ஆத்மாவையும் ஸ்தூலகம் முதலியன போலவே எண்ணுகிறார்கள்.

(20)

अयःकाष्ठादिकं यद्वद्वह्निवद्वह्नि योगतः ।
भाति स्थूलादिकं सर्वमात्मवत्स्वात्मयोगतः ॥

அய: காஷ்டாதிகம் யத்வத் வஹ்நிவத்வஹ்நியோகத: ।
பாதி ஸ்தூலாதிகம் ஸர்வம் ஆத்மவத் ஸ்வாத்ம யோகத:॥

தீயில் முழுதும் காய்ச்சியபொழுது தீ ஏறியுள்ளதால் இரும்புக்கம்பி தீ போலவேயாகி விடுகிறதோ அதுபோலவே நிஜ ஆத்மா சம்பந்தப்பட்டிருப்பதால் ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரண சரீரங்கள் ஆத்மா போலவே ஆகிவிடுகிறது.

(21)

दाहको नैव दाह्यं स्याद्दाह्यं तद्वन्न दाहकः ।
नैवात्मायमनात्मा स्यादनात्मायं न चात्मकः ॥

தாஹகோ நைவ தாஹ்யம் ஸ்யாத் தாஹ்யம் தத்வந்ந தாஹகம்।

நைவாத்மாऽயமநாத்மா ஸ்யாத் அநாத்மாऽயம் நசாத்மக:॥

தீ முதலிய எரிக்கும் சக்தியுள்ளவை மற்றொரு எரிசக்தியினால் கொளுத்தப்பட முடியாது. அதுபோல் எரிக்கப்படும் பொருளும் எரிப்பதாவதில்லை. ஆத்மாவாயுள்ளது அநாத்மாகவோ, அநாத்மா என்பது ஆத்மாவாகவும் ஆவதில்லை.

(22)

प्रमेयादित्रयं सार्थं भानुना घटकुड्यवत् ।
येन भाति स एवाहं प्रमेयादिविलक्षणः ॥

ப்ரமேயாதித்ரயம் ஸார்த்தம் பாநுனா கடகுட்யவத்।
யேந பாதி ஸ ஏவாஹம் ப்ரமேயாதிவிலக்ஷண:॥

ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்றிவை மூன்றும் பெயருக்கு ஏற்ப பொருள் உள்ளவை. குடம், சுவர் முதலியன சூர்யவெளிச்சமாகிய ப்ரமாதாவினால் மெய்ப்பிக்கப்படுகின்றன. இந்த ப்ரமேயம் முதலிய மூன்றினுக்குட்படாமல் எதன் மூலம் இவ்வுலகம் முழுதும் தெளிவாகிறதோ அதுவே ஆத்மா.

(23)

भानुस्फुरणतो यद्वत्स्फुरतीव घटादिकम् ।
स्फुरतीव प्रमेयादिरात्मस्फुरणतस्तथा ॥

பானுஸ்புரணதோ யத்வத் ஸ்புரதீவ கடாதிகம்।
ஸ்புரதீவ ப்ரமேயாதி: ஆத்மஸ்புரணத ஸ்ததா॥

குடம் முதலியன சூர்யப்ரகாசத்தினால் ஒளிர்வது போல் ப்ரமேயம், ப்ரமாணம், ப்ரமாதா ஆகியவையும் ஆத்மா பிரகாசிப்பதால்தான் ஒளிர்ப்பிக்கப்படுகிறது.

(24)

पिष्टादिगुडसंपर्काद्गुडवत्प्रीतिमान्यथा ।
आत्मयोगात्प्रमेयादि रात्मवत्प्रीतिमान्भवेत् ॥

பிஷ்டாதி: குளஸம்பர்காத் குளவத் ப்ரீதிமான்யதா।
ஆத்மயோகாத் ப்ரமேயாதி: ஆத்ம வத்ப்ரீதிமான் பவேத்॥

வெல்லம் சேரும்பொழுது மாவு முதலியன தித்ப்பு உள்ளதாகவும், உகந்ததாகவும் ஆவதுபோல், ஆத்மாவோடு சம்பந்தப்பட்டு உலக வஸ்துக்கள் ஆத்மா போன்று மனதிற்கு உகந்தவையாகின்றன.

(25)

घटनीरान्नपिष्टानामुष्णत्वं वह्नियोगतः ।
वह्निंविना कथं तेषामुष्णता स्याद्यथा क्वचित् ॥

கடநீராந்ந பிஷ்டாநாமுஷ்ணத்வம் வஹ்நியோகத:।
வஹ்நிம்விநா கதம்தேஷாம் உஷ்ணதா
ஸ்யாத்யதாக்வசித்॥

கடம், தண்ணீர், அன்னம், மாவு இவற்றிற்கு தீயுடன் சேரும்போது சூடு ஏற்படுவது இயற்கைதானே. தீ இல்லாமல் அவற்றிற்கு சூடு வேறு எங்கிருந்து வர முடியும்?

(26)

भूतभौतिकदेहानां स्फुर्तिता स्वात्मयोगतः ।
विनात्मानं कथं तेषां स्फूर्तिता स्यात्तथाक्वचित् ॥

பூதபௌதிக தேஹாநாம் ஸ்பூர்திதா ஸ்வாத்மயோகத:।
விநாऽऽத்மானம் கதம் தேஷாம் ஸ்பூர்திதா ஸ்யாத்
ததாக்வசித்॥

ப்ருதிவி முதலிய ஐந்து பூதங்களுக்கோ, பௌதிக வடிவங்களுக்கோ ஆத்ம சம்பந்தத்தினால்தான் உணர்வு, எழுச்சி, பிரகாசம் இவை எல்லாம் ஏற்படுகின்றன. ஆத்மாவின்றி அவை ஏற்படுவதில்லை.

(27)

नानाविधेषुकुम्भेषु वसत्येकं नभो यथा।
नानाविधेषु देहेषु तद्वदेको वसाम्यहम्॥

நாநாவிதேஷு கும்பேஷு வஸத்யேகோ நபோயதா।
நாநாவிதேஷு தேஹேஷு தத்வத் ஏகோ வஸாம்யஹம்॥

பல குடங்களில் ஒரே ஒரு ஆகாசமே ப்ரதிபலிக்கிறது. அதுபோலவே பல சரீரங்களில் ஒரே ஒரு ஆத்மாதான் இருக்கிறது.

(28)

नानाविधत्वं कुम्भानां न यात्येव यथानभः।
नानाविधत्वं देहानां तद्वदेव न याम्यहम्॥

நாநாவிதத்வம் கும்பாநாம் நயாத்யேவ யதா நப:।
நாநாவிதத்வம் தேஹாநாம் தத்வதேவ ந யாம்யஹம்॥

குடங்கள் பலவாக இருப்பினும் ஆகாசம் பலவாக இருக்க முடியாது. அதுபோல சரீரங்கள் பலவிருப்பினும் ஆத்மா பலவாக இருப்பதில்லை.

(29)

यथाघटेषु नष्टेषु घटाकाशो न नश्यति।
तथादेहेषु नष्टेषु नैव नश्यामि सर्वगः॥

யதா கடேஷு நஷ்டேஷு கடாகாசோ ந நச்யதி।
ததாதேஹேஷு நஷ்டேஷு நைவ நச்யாமி சர்வக:॥

எல்லா சரீரங்களிலும் ஊடுருவி இருப்பதால் பல சரீரங்கள் அழிந்தாலும் ஆத்மா அழிவதில்லை. குடங்கள் பல அழிந்தாலும் குடம் சார்ந்த ஆகாசம் அழியாததுபோல.

(30)

उत्तमादीनि पुष्पाणि वर्तन्ते सूत्रके यथा ।
उत्तमाद्यास्तथा देहा वर्तन्ते मयि सर्वदा ॥

உத்தமாதீநி புஷ்பாணி வர்தந்தே ஸூத்ரகே யதா।
உத்தமாத்யா ஸ்ததா தேஹா வர்தந்தே மயி ஸர்வதா॥

நூலில் (மாலையாக கட்டியிருக்கும்பொழுது) எவ்வாறு சிறந்த, நடுத்தர, சாதாரண புஷ்பங்கள் உள்ளனவோ அதுபோல் என்னிடத்தில் (ஆத்மாவினிடத்தில்) இணையும் பொழுதும் உயர்ந்த - நடுத்தர - சாதாரண சரீரங்கள் உள்ளன.

(31)

यथा न संस्पृशेत्सूत्रं पुष्पाणामुत्तमादिता ।
तथा नैकं सर्वगं मां देहानामुत्तमादिता ॥

யதா ந ஸம்ஸ்ப்ருசேத் ஸூத்ரம் புஷ்பாணாம்
உத்தமாதிதா।
ததா நைகம் ஸர்வகம் மாம் தேஹாநாமுத்த மாதிதா॥

தொடுக்கப்பட்ட மாலையின் இழைநூல், தொடுத்துள்ள புஷ்பங்களின் உயர்வு - தாழ்வுகளைச் சார்வதில்லை. அதுபோல் எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கும் ஒன்றேயான ஆத்மா, சரீரங்களின் சீர்மை - தாழ்மை குணங்களைச் சார்வதில்லை.

(32)

पुष्पेषु तेषु नष्टेषु यद्वत्सूत्रं न नश्यति ।
तथा देहेषु नष्टेषु नैव नश्याम्यहं सदा ॥

புஷ்பேஷுதேஷு நஷ்டேஷு யத்வத் ஸூத்ரம் ந நச்யதி।
ததா தேஹேஷு நஷ்டேஷு நைவ நச்யாம்யஹம் ஸதா ॥

மாலையின் இழை நூல், தொடுத்த புஷ்பங்கள் காய்ந்து உதிர்ந்தாலும் வீணாவதில்லை. அதுபோல் சரீரங்கள் அழிந்தாலும் ஆத்மா அழிவதில்லை.

(33)

पर्यङ्करज्जुरन्ध्रेषु नानेवैकापि सूर्यभा ।
एकोऽप्यनेकवद्भाति तथाक्षेत्रेषु सर्वगः ॥

பர்யங்க - ரஜ்ஜு - ரந்த்ரேஷு நாநேவைகாபி ஸூர்யபா।
ஏகோऽப்ய நேகவத் பாதி ததாக்ஷேத்ரேஷு ஸர்வக: ॥

கட்டிலின், கயிற்று துவாரங்களிலும், பொந்திலும் விழும் சூர்ய வெளிச்சம் ஒன்றாயினும் பலவை போல தோன்றுகிற தல்லவா அதுபோல் எல்லா சரீரங்களிலும் இசைந்து நிற்கும் ஆத்மா ஒன்றேயாயினும் பலவையாகத் தோற்றமளிக்கிறது.

(34)

रज्जुरन्ध्रस्थदोषादि सूर्यभां न स्पृशेद्यथा ।
तथा क्षेत्रस्थदोषादि सर्वगं मां न संस्पृशेत् ॥

ரஜ்ஜு ரந்த்ரஸ்த தோஷாதி சூர்யபாம் ஸ்ப்ருசேத்யதா।
ததா க்ஷேத்ரஸ்த தோஷாதி ஸர்வகம் மாம் ந
ஸம்ஸ்ப்ருசேத் ॥

(கட்டில்) கயிறு, துவாரங்களிலுள்ள குற்றங்குறைகள் சூர்ய வெளிச்சத்தையணுகாது போல சரீரங்களிலுள்ள குறைகள் ஊடுருவியிருக்கும். ஆத்மாவை யணுகுவதில்லை.

(35)

तद्रज्जुरन्ध्रनाशेषु नैव नश्यति सूर्यभा ।
तथा क्षेत्रविनाशेषु नैव नश्यामि सर्वगः ॥

தத்ரஜ்ஜு ரந்த்ர நாசேஷு நைவ நச்யதிஸூர்யா।
ததா க்ஷேத்ரவிநாசேஷு நைவ நச்யாமி ஸர்வக:॥

அந்த கயிறோ, துவாரமோ இல்லை என்று ஆனபின்னும் சூர்யவெளிச்சம் இல்லையாவதில்லை. அதுபோல் சரீரங்கள் இல்லையென ஆனபொழுதும் அவையனைத்திலும் உள்ள ஆத்மா இல்லையாவதில்லை.

(36)

देहो नाहं प्रदृश्यत्वाद्भौतिकत्वान्न चेन्द्रियम् ।
प्राणो नाहमनेकत्वान्मनो नाहं चलत्वत: ॥

தேஹோ நாஹம் ப்ரத்ருச்யத்வாத் பௌதிக த்வாத் நசேந்த்ரியம்।
ப்ராணோ நாஹமநேகத்வாத் மநோ நாஹம் சலத்வத:॥

உடல்கண்ணுக்குத் தெரிவதுபோல் ஆத்மா தெரிவதில்லை. அதனால் உடல் ஆத்மா ஆகாது. புலன்கள் பௌதிகமாய் இருப்பது போல் ஆத்மா பௌதிகமில்லை. அதனால் அவையும் ஆத்மா இல்லை. ப்ராணன் முதலியவையும் ஆத்மாவாகாது. பிராணன் முதலியனபோல் பலவாக ஆத்மா இல்லை. மனம் சஞ்சலமாய் இருப்பது போல் சஞ்சலமாக இல்லாததால் மனமும் ஆத்மா இல்லை.

(37)

बुद्धिर्नाहं विकारित्वात्तमो नाहं जडत्वत: ।
देहेन्द्रियादिकं नाहं विनाशित्वाद्घटादिवत् ॥

புத்திர் நாஹம் விகாரித்வாத் தமோநாஹம் ஜடத்வத:।
தேஹேந்த்ரியாதிகம் நாஹம் விநாசித்வாத் கடாதிவத் ॥

புத்தியும் ஆத்மாவாகாது - விகாரத்தை அடைவதால் ஜடமாக இருப்பது தமஸ் என்ற அஜ்ஞானம். ஆகவே அஜ்ஞானமும் ஆத்மாவன்று. உடலோ புலன்களோ ஆத்மா எனப்படமாட்டாது. ஏனெனில் அவை அழியக் கூடியவை -

உண்டாக்கிய குடம் முதலியவை போல. ஆதலால் இவற்றிற் கெல்லாம் அப்பாற்பட்டது ஆத்மா.

(38)

देहेन्द्रियप्राणमनोबुद्ध्यज्ञानानि भासयन् ।
अहंकारं तथाभामि चैतेषामभिमानिनम् ॥

தேஹேந்த்ரிய ப்ராணமனோ புத்யஜ்ஞாநாநி பாஸயன்।
அஹங்காரம் ததாபாமி சைதேஷா மபிமானினம்॥

தேஹம், இந்த்ரியம், பிராணன், மனது, புத்தி, அஜ்ஞானம் இவற்றை ஒளிர்விப்பதுடன், இவற்றின் மறு உருவமாக எண்ணப்படும் அஹங்காரத்தையும் ஒளிர்விக்கிறதுதான் ஆத்மா.

(39)

सर्वं जगदिदं नाहं विषयत्वादिदंधियः ।
अहं नाहं सुषुप्त्यादौ अहमः साक्षितः सदा ॥

ஸர்வம் ஜகதிதம் நாஹம் விஷயத்வாத் இதம்திய:।
அஹம் நாஹம்ஸுஷுப்த்யாதௌ அஹம:ஸாக்ஷித: ஸதா॥

இவ்வுலகம் முழுதுமே கூட ஆத்மாவன்று ஏனெனில் 'இது உலகம்' என்றறிகின்றவனுக்கு இவ்வுலகம்தானே இலக்காகிறது. ஸுஷுப்தி காலத்தில், ஆத்மா ஸாக்ஷியாக இருப்பதால் 'அஹம்' பதவாச்யம் ஆத்மாவல்ல.

(40)

सुप्तौ यथा निर्विकारस्तथावस्थाद्वयेऽपि च ।
द्वयोर्मात्राभियोगेन विकारीव विभाम्यहम् ॥

ஸுப்தௌ யதா நிர்விகாரஸ்: ததா வஸ்தாத்வயேऽபி ச।
த்வயோர் மாத்ராபியோகேந விகாரீவ விபாம்யஹம்॥

ஸுஷுப்தியில் போலவே ஜாக்ரத் + ஸ்வப்னவஸ்தைகளிலும் கூட ஒரளவு விகாரம் இல்லையெனினும், விகாரமுள்ளது போல் ஆத்மா தோற்றமளிக்கிறது அவ்வளவுதான்.

(41)

उपाधिनीलरक्ताद्यैः स्फटिको नैव लिप्यते ।
तथात्मा कोशजैः सर्वैः कामाद्यैर्नैव लिप्यते ॥

உபாதிநீல ரக்தாத்யை: ஸ்படிகோ நைவ லிப்யதே।
ததாऽऽத்மா கோசஜை: ஸர்வை: காமாத்யை: நைவ லிப்யதே।

ஸ்படிகக்கல், உபாதிகளான நீலம், சிவப்பு முதலிய குணங்களால் ஸம்பந்தப்படுவதில்லை போலவே ஆத்மாவும் கோசங்களில் தோன்றும் காமாதிகளால் சம்பந்தப்படுவதில்லை.

(42)

फालेन भ्राम्यमाणेन भ्रमतीव यथा मही ।
अगोऽप्यात्मा विमूढेन चलतीव प्रदृश्यते ॥

பாலேந ப்ராம்யமாணோந ப்ரமதீவயதா மஹீ।
அகோவுப்யாத்மா விமூடேந சலதீவ ப்ரத்ருச்யதே॥

சுழற்றப்பட்டுச்சுழலும் உழவாரப் படையினால் பூமியும் சுழல்வதுபோல் காணப்படும். அதுபோல் மயக்கம் காரணமாக அசையாத ஆத்மா அசைவதாகத் தோன்றும்.

(43)

देहत्रयमिदं नित्यमात्मत्वेनाभिमन्यते ।
यावत्तावदयं मूढो नानायोनिषु जायते ॥

தேஹத்ரயமிதம் நித்யம் ஆத்மத்வேநாபி மந்யதே।
யாவத்தாவதயம் மூடோ நாநாயோநிஷு ஜாயதே॥

இந்த மூன்று சரீரமும் ஆத்மாவாய் எண்ணப்படுவதுண்டு. போகும்வழி தெரியாத மனிதன் பல ஜன்மாக்களில் பிறக்கும் வரை அது தொடரும்.

(44)

निद्रादेहजदुःखादि जाग्रद्देहं न संस्पृशेत् ।
जाग्रद्देहजदुःखादिस्तथात्मानं न संस्पृशेत् ॥

நித்ராதேஹஜது: காதி: ஜாக்ரத்தேஹம் நஸம்ஸ்ப்ருசேத்।
ஜாக்ரத்தேஹஜது: காதி: ததாऽऽத்மானம் ந ஸம்ஸ்ப்ரு
சேத் ॥

ஸ்வப்னாவஸ்தையில், தேஹத்திலுண்டாகும் துன்பம் எவையும் ஜாக்ரதவஸ்தையிலுள்ள தேகத்தை தீண்டாது. அதுபோல் ஜாக்ரத் அவஸ்தையிலுள்ள துன்பம் முதலியன ஆத்மாமாவையும் தீண்டாது.

(45)

जाग्रद्देहवदाभाति निद्रादेहस्तु निद्रया ।
निद्रादेहविनाशेन जाग्रद्देहो न नश्यति ॥

ஜாக்த்தேஹவத் ஆபாதி நித்ராதேஹஸ்து நித்ரயா।
நித்ராதேஹ விநாசேந ஜாக்ரத் தேஹோ ந நச்யதி॥

ஸ்வப்நாவஸ்தையிலுள்ள தேகம் ஜாக்ரத் அவஸ்தையில் உள்ள தேகம் போலவே காணப்படுமாயினும், நிர்ராதேஹம் அழிவதால் ஜாக்ரத் - காலதேகம் அழியாதே!

(46)

तथाऽयमात्मवद्भाति जाग्रद्देहस्तु जागरात् ।
जाग्रद्देहविनाशेन नात्मा नश्यति कर्हिचित् ॥

ததாய மாத்மவத்பாதி ஜாக்ரத்தேஹஸ்து ஜாகராத்।
ஜாக்ரத் தேஹவிநாசேந நாத்மா நச்யதி கர்ஹிசித்॥

ஜாக்ரத் அவஸ்தையிலுள்ள தேகம் விழித்திருப்பதால் ஆத்மாபோல் தோன்றுமே தவிர, அந்த ஜாக்ரத் - தேகம் தொலையும் பொழுது ஆத்மா ஒருபோழ்தும் தொலையாது.

(47)

हित्वाऽयं स्वाप्निकं देहं जाग्रद्देहमपेक्षते ।
जाग्रद्देहप्रबुद्धोऽयं हित्वात्मानं यथातथा ॥

ஹித்வாऽயம் ஸ்வாப்னிகம் தேஹம் ஜாக்ரத்
தேஹமபேக்ஷதே ।
ஜாக்ரத் தேஹப்ரபுத்தோऽயம் ஹித்வாऽऽத்மாநம்
யதாயதா ॥

ஸ்வப்நாவஸ்தா தேஹத்தை நீக்கி ஜாக்ரத் அவஸ்தா தேகத்தைதான் இந்த ஆத்மா குடிகொள்ளத் தேடுகிறது. ஆனால் ஜாக்ரத்-அவஸ்தையில் தேகத்தைப் பெற்று விளக்கமுடனிருந்தும், அந்தர்யாமியான ஆத்ம பாவத்தைக் கொள்வதில்லை.

(48)

स्वप्नभोगे यथैवेच्छा प्रबुद्धस्य न विद्यते ।
असत्स्वर्गादिके भोगे नैवेच्छा ज्ञानिनस्तथा ॥

ஸ்வப்நபோகே யதைவேச்சா ப்ரபுத்தஸ்ய நவித்யதே ।
அஸதீத்ஸ்வர்காதிகே போகே நைவேச்சா
ஜ்ஞாநிநஸ்ததா ॥

ஜாக்ரத் அவஸ்தையில் உள்ளவனுக்கு ஸ்வப்ன அவஸ்தையிலுள்ள சுகபோகத்தில் விருப்பம் இருக்குமோ? இருக்காதே அதுபோல், ஜ்ஞானியானவனுக்கு மாயையான ஸ்வர்கம் முதலிய போகங்களில் விருப்பம் இருக்காது.

(49)

भोक्त्रा बहिर् यथा भोग्यः सर्पो दृषदि कल्पितः ।
रूपशीलादयश्चात्मभोगा भोग्यस्वरूपकाः ॥

போக்தர பஹிர்யதா போக்ய: ஸர்போ த்ருஷதி கல்பித: ।
ரூபசீலாதயஸ்சாத்ம போகா - போக்யஸ்வரூபகா: ॥

கல்லில் உருவாக்கப்பட்ட ஸர்பம், உபயோகிப்பவருக்கு உபயோகப்பொருளாவதுபோல், வெளித்தோற்றம், சுபாவம் இவை பெயரளவில் ஆத்மாவின் அனுபவப் பொருளாக இருக்கலாம்.

(50)

ज्ञस्य नास्त्येव संसारो यद्वदज्ञस्य कर्मिणः ।
जानतो नैव भीर्यद्वद्रज्जुसर्पमजानतः ॥

ஜ்ஞஸ்ய நாஸ்த்யேவ ஸம்ஸாரோ யத்வத ஜ்ஞஸ்ய கர்மிண: ।
ஜாநதோ நைவ பீர்யத்வத் ரஜ்ஜுஸர்ப மஜாநத: ॥

ஆத்மஞானம் இல்லாமல் கர்மாக்களை மட்டும் அனுஷ்டிப்பவனுக்கு ஸம்ஸாரம் என்பது பொருட்டல்ல. அதுபோல ஆத்ம ஜ்ஞானிக்கு ஸம்ஸாரம் இல்லை. மேலும் அவனுக்கு பயமும் இல்லை. கயிற்றில் பாம்பு என்ற ப்ரமஞானமில்லாதவனுக்கு பயமில்லாதது போல்.

(51)

सैन्धवस्य घनो यद्वज्जलयोगाज्जलं भवेत् ।
स्वात्मयोगात्तथा बुद्धिरात्मैव ब्रह्मवेदिनः ॥

ஸைந்தவஸ்ய கனோயத்வத் ஜலயோகாத் ஜலம்பவேத் ।
ஸ்வாத்மயோகாத் ததா புத்திராத்மைவ ப்ரஹ்மவேதிந: ॥

சமுத்ரஜலம் சேர்ந்துள்ளதால் கரிய மேகமே ஜலமாவது போல் ப்ரஹ்மஞானம் ஏற்பட்டவருக்கு ஆத்ம ஸம்பந்தமிருப்பதால் புத்தியே ஆத்மாவாகிறது.

(52)

तोयाश्रयेषु सर्वेषु भानुरेकोऽप्यनेकवत् ।
एकोऽप्यात्मा तथा भाति सर्वक्षेत्रेष्वनेकवत् ॥

தோயாச்ரயேஷு ஸர்வேஷு பானுரேகோऽப்யநேகவத் ।
ஏகோऽப்யாத்மா ததாபாதி ஸர்வக்ஷேத்ரேஷ்வநேக வத் ॥

தண்ணீர் நிலைகளில் சூர்யன் ஒருவனே எனினும் பலவாராக காண்பது போல், ஆத்மா ஒன்றே எனினும் எல்லா சரீரங்களிலும் பலவாராகக் காண்கிறது.

(53)

भानोरन्य इवाभाति जलभानुर्जले यथा।
आत्मनोऽन्य इवाभासो भाति बुद्धौ तथाऽऽत्मनः ॥

பானோரன்ய இவாபாதி ஜலபாநுர்ஜலேயதா।
ஆத்மநோऽன்ய இவாபாஸோ பாதி புத்தெளத தாத்மந:॥

தண்ணீரில் நிழல்கொண்ட ஜல சூர்யன் சாதாரண சூரியனைக் காட்டிலும் வேறானவராகத் தோன்றுவதுபோல், புத்தியில் ஆத்மத் தோற்றம், ஒன்றான ஆத்மாவைக் காட்டிலும் வேறானதாக ஏற்படுகிறது.

(54)

बिम्बं विना यथा नीरे प्रतिबिम्बो भवेत्कथम्।
विनात्मानं तथा बुद्धौ चिदाभासो भवेत्कथम् ॥

பிம்பம் விநா யதா நீரேப்ரதிபிம்போ பவேத் கதம்।
விநாத்மாநம் ததாபுத்தெள சிதாபாஸோ பவேத்கதம்॥

தண்ணீரில் நிழல் படிய வேண்டுமாயின் அதன் நிஜ பிம்பம் வேண்டுமல்லவா? அதுபோல், ஆத்மா இல்லாமல் புத்தியில் ஜ்ஞானப் போலிதான் எப்படி ஏற்படும்?

(55)

प्रतिबिम्बचलत्वाद्या यथा बिम्बस्य कर्हिचित्।
न भवेयुस्तथाभासकर्तृत्वाद्यास्तु नात्मनः ॥

ப்ரதிபிம்ப சலத்வாத்யா யதா பிம்பஸ்ய கர்ஹிசித்।
ந பவேயுஸ்ததாऽऽபாஸ கர்த்ருத்வாத்யாஸ்து நாத்மந:॥

நீரில் நிழல் அசைவதால், நிஜபிம்பத்தின் போலி, செயல்திறம் இவை தெரியாமல் போவது போல்: ஆத்மாவின் ஆபாஸம், (போலி) கர்த்ருத்வம் (செயல்திறம்) இவை இல்லாமல் போகிறது.

(56)

जले शैत्यादिकं यद्वज्जलभानुं न संस्पृशेत् ।
बुद्धेः कर्मादिकं तद्वच्चिदाभासं न संस्पृशेत् ॥

ஜலே ஶைத்யாதிகம் யத்வத்ஜலபானும்ந ஸம்ஸ்ப்ருசேத்।
புத்தே: கர்மாதிகம் தத்வத் சிதாபாஸம் ந ஸம்ஸ்ப்ருசேத்॥

நீரின் தன்மை, நீரில் சூர்ய நிழலைத் தீண்டுவதில்லை அது போல் புத்தியின் (ஞானத்தின்) செயலாக்கம் முலியன ஞானப்போலியைத் தொடுவதில்லை.

(57)

बुद्धेः कर्तृत्वभोक्तृत्वदुःखित्वाद्यैस्तु संयुतः ।
चिदाभासो विकारीव शरावस्थाम्बुभानुवत् ॥

புத்தே: கர்த்ருத்வ – போக்த்ருத்வ – து:கித்வாத்யைஸ்து ஸம்யுத:।
சிதாபாஸோ விகாரீவ சராவஸ்தாம்புபானுவத்॥

புத்திக்கு (ஜ்ஞானத்திற்கு) கர்த்ருத்வம் - போக்த்ருத்வம் - துஃகித்வம் - என்று மாறுபட்ட தன்மை உண்டு. அதுபோல் ஞானப்போலிக்கும் மாற்றம் ஏற்படலாம். மண் அகலில் உள்ள தண்ணீரில் படிந்த சூர்யநிழல் விகாரியாவது போல்

(58)

शरावस्थोदके नष्टे तत्स्थो भानुर्विनष्टवत् ।
बुद्धेर्लये तथा सुप्तौ नष्टवत्प्रतिभात्ययम् ॥

சராவஸ்தோதகே நஷ்டே தத்ஸ்தோ பானுர்விநஷ்டவத்।
புத்தேர்லயே ததா ஸுப்தௌ நஷ்டவத் ப்ரதிபாத்யயம்॥

மண் அகலில் தண்ணீர் காலியானபின் அதனுள் படிந்த சூர்ய நிழலும் இல்லையாயிற்றே அதுபோல் புத்தி (ஞானம்) இல்லாத பொழுதோ அல்லது ஸுஷுப்தியிலோ இந்த ஆத்மாவும் இல்லைபோல் ஆகிவிடுகிறது.

(59)

जलस्थार्कं जलं चोर्मिं भासयन्भातिभास्करः ।
आत्माभासं धियं बुद्धेः कर्तृत्वादीनयं तथा ॥

ஜலஸ்தார்கம் ஜம் சோர்மிம் பாஸயன் பாதி பாஸ்கர:।
ஆத்மாபாஸம் தியம் புத்தே: கர்த்ருத்வாதீநயம் ததா ॥

தண்ணீரிலுள்ள சூர்யனையும், தண்ணீரையும், அதிலுள்ள அலையையும் பிரகாசிப்பித்துக் கொண்டு சூர்யன் விளங்குவதுபோல் இந்த ஆத்மா, ஆத்மப்போலியான புத்தியையும், புத்தியின் கர்த்ருத்வம், போக்த்ருத்வம் முதலியவற்றையும் பிரகாசிக்கச் செய்கிறது.

(60)

मेघावभासको भानुर्मेघच्छन्नोऽवभासते ।
मोहवभासकस्तद्वन्मोहच्छन्नो विभात्ययम् ॥

மேகாவபாஸகோ பானு: மேகச்சந்நோவுவ பாஸதே।
மோஹவபாஸக ஸதத்வத் மோஹச்சந்நோ வியாத்யயம்॥

மேகம் மூடியபோதிலும் மேகத்தை பிரகாசிக்கச் செய்யும் சூர்யன் போல மோஹம் மறைத்தும் கூட ஆத்மா மோஹத்தை பிரகாசிக்கச் செய்கிறது.

(61)

भास्यं मेघादिकं भानुर्भासयन्प्रतिभासते ।
तथा स्थूलादिकं भास्यं भासयन्प्रतिभात्ययम् ॥

பாஸ்யம் மேகாதிகம் பானு: பாஸயன் ப்ரதிபாஸதே।
ததா ஸ்தூலாதிகம் பாஸ்யம் பாஸயன் ப்ரதிபாத்யயம் ॥

சூர்யன், மேகம் முதலிய ஒளிரச் செய்ய வேண்டிய வற்றை ஒளிரச் செய்து தானும் ஒளிர்வதுபோல், ஆத்மா ஸ்தூலம் சூக்ஷ்மம் முதலிய பிரகாசிக்கச் செய்ய வேண்டியதை பிரகாசிக்கச் செய்து தானும் பிரகாசிக்கிறது.

(62)

सर्वप्रकाशको भानुः प्रकाश्यैनैव दूष्यते ।
सर्वप्रकाशको ह्यात्मा सर्वैस्तद्वन्न दूष्यते ॥

ஸர்வப்ரகாசகோ பாநு: ப்ரகாச்யை: நைவ தூஷ்யதே।
ஸர்வப்ரகாசகோ ஹ்யாத்மா ஸர்வைஸ் தத்வத்ந
தூஷ்யதே॥

எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் சூரியன், பிரகாச்யமான மேகம் முதலியவற்றால் தூஷிக்கப்படுவதுண்டு. ஆனால் ஆத்மா ஸர்வத்தையும் பிரகாசிக்கச் செய்கிறதோடு மற்றைய ப்ரகாச்யங்களால் தூஷிக்கப்படுவதில்லை.

(63)

मुकुरस्थं मुखं यद्वन्मुखवत्प्रथतेमृषा ।
बुद्धिस्थाभासकस्तद्वदात्मवत्प्रथते मृषा ॥

முகுரஸ்தம் முகம் யத்வத் முகவத்ப்ரததேம்ருஷா।
புத்திஸ்தா பாஸக ஸ்தத்வத் ஆத்மவத் ப்ரததேம்ருஷா॥

கண்ணாடியில் தெரியும் முகம் பொய்யாக முகம் போலவே நினைக்கப்படுவது போல, புத்தியிலுள்ள ஆத்மப் போலி பொய்யாக ஆத்மா போல் நினைக்கப்படுகிறது.

(64)

मुकुरस्थस्य नाशेन मुखनाशो भवेत्कथम् ।
बुद्धिस्थाभासनाशेन नाशो नैवात्मनः क्वचित् ॥

முகுரஸ்தஸ்ய நாசேந முக நாசோ பவேத்கதம்।
புத்திஸ்தாபாஸநாசேந நாசோ நைவாத்மன: க்வசித்॥

கண்ணாடியில் தோன்றிய முகம் அழிந்ததால் முகமே அழிந்து விடுவதில்லையே அதுபோல் புத்தியிலுள்ள போலி இல்லாமல் ஆகிவிடுவதால் ஆத்மாவே இல்லையென்று ஆகி விடாது.

(65)

ताम्रकल्पितदेवादिस्ताम्रादन्य इव स्फुरेत् ।
प्रतिभास्यादिरूपेण तथात्मोत्थमिदंजगत् ॥

தாம்ரகல்பித தேவாதி: தாம்ராதன்ய இவ ஸ்புரேத் ।
ப்ரதிபாஸ்யாதி ரூபேண ததாऽऽத்மோத்தமிதம் ஜகத் ॥

தாமிரம் முதலிய உலோகத்தில் தயாரித்த தேவர்களுடைய உருவம் தாமிரத்தைக் காட்டிலும் வேறானதாகத் தெரியும். அதுபோல ஆத்மாவில் தோன்றிய இந்த உலகம் ப்ரதிபாஸ்ய உருவத்தில் காணக்கிடைக்கிறது.

(66)

ईशजीवात्मवद्भाति यथैकमपि ताम्रकम् ।
एकोऽप्यात्मा तथैवायमीशजीवादिवन्मृषा ॥

ஈச ஜீவாத்மகவத்பாதி யதைகமபி தாம்ரகம் ।
ஏகோऽப்யாத்மா ததைவாய மீசஜீவாதிவன்ம்ருஷா ॥

தாமிரம் ஒன்றேயாயினும் ஜீவாத்ம - பரமாத்மாபோல் தோற்றமளிக்கிறதே. அதே போல் ஆத்மா ஒன்றேயாயினும் பரமாத்ம - ஜீவாத்ம ரூபமாக தோற்றமளிக்கிறது.

(67)

यथेश्वरादिनाशेन ताम्रनाशो न विद्यते ।
तथेश्वरादिनाशेन नाशो नैवात्मनः सदा ॥

யதேச்வராதிநாசேந தாம்ரநாசோ ந வித்யதே ।
ததேச்வராதிநாசேந நாசோ நைவாத்மந: ஸதா ॥

தாமிரத்தில் பொறித்த கடவுளர் உருவம் மங்கினும் தாமிரம் அழிவதில்லை. அதுபோலவே பரமாத்மா (போலி) நாசம் இருந்தாலும் ஆத்ம நாசம் ஒருபோதும் இல்லை.

(68)

अध्यस्तो रज्जुसर्पोऽयं सत्यवद्रज्जुसत्तया ।
तथाजगदिदं भाति सत्यवत्स्वात्मसत्तया ॥

அத்யஸ்தோ ரஜ்ஜுஸர்போऽயம் ஸத்யவத்
ரஜ்ஜுஸத்தயா ।
ததாஜகதிதம் பாதி ஸத்யவத் ஸ்வாத்மஸத்தயா ॥

'கயிற்றில் ஸர்பம்' என்றது அத்யாஸ மூலமாய் இருந்தாலும் கயிறு இருப்பதால் உண்மை போல் இருக்கிறது. அது போல் இந்த உலகம் உண்மை போல உள்ளது. ஏனெனில் ஆத்மா இருப்பதால்

(69)

अध्यस्ताहेरभावेन रज्जुरेवावशिष्यते ।
तथाजगदभावेन सदात्मैवावशिष्यते ॥

அத்யஸ்தாஹேரபாவேந ரஜ்ஜுரேவாவசிஷ்யதே ।
ததா ஜகதபாவேந ஸதாத்மைவாவ சிஷ்யதே ॥

அத்யாஸமாகக் கருதப்பட்ட ஸர்பம் (ஸர்பபுத்தி) நீங்கியபின் கயிறுதானே மிஞ்சுவது. அதுபோல் உலகத் தோற்றம் நீங்கியபின் ஸத்தான ஆத்மா மட்டுமே மிஞ்சுவது.

(70)

स्फटिके रक्तता यद्वदुपाधेर्नीलताम्बरे ।
यथा जगदिदं भाति तथासत्यमिवाद्वये ॥

ஸ்படிகே ரக்ததா யத்வத் உபாதேர்நீலதாவும்ரே ।
யதா ஜகதிதம் பாதி ததாஸத்ய மிவாத்வயே ॥

உபாதியின் காரணமாகத்தான் ஸ்படிகத்தில் சிவப்பு நிறமும், ஆகாயத்தில் நீலநிறமும். அதுபோல ஜகத்தும் அத்வயமான ஆத்மாவில் ஸத்யம் போல தோன்றுகிறது.

(71)

स्फटिके रक्तता मिथ्या मृषा खे नीलता यथा ।
तथा जगदिदं मिथ्या एकस्मिन्न द्वये मयि ॥

ஸ்படிகே ரக்ததா மித்யா ம்ருஷா கே நீலதா யதா।
ததா ஜகதிதம் மித்யா ஏகஸ்மிந் அத்வயே மயி॥

ஸ்படிகத்தில் சிவப்பு பொய்யானது போலவும் ஆகாயத்தில் நீலநிறம் பொய்யானது போலவும் அத்வயமான ஆத்மாவில் உலகமும் அவ்வாறே பொய்யானது.

(72)

जीवेश्वरादिभावेन भेदंपश्यति मूढधीः ।
निर्भेदे निर्विशेषेऽस्मिन्कथं भेदो भवोद्ध्रुवम् ॥

ஜீவேச்வராதிபாவேந பேதம் பச்யதி மூடதீ:।
நிர்பேதே நிர்விசேஷேऽஸ்மிந் கதம்பேதோபவேத்
த்ருவம்॥

ஒன்றும் தெரிந்து கொள்ளாதவன் ஜீவாத்மா, பரமாத்மா என்ற கணக்கில் வேற்றுமை காண்கிறான். வேற்றுமையும் விசேஷமும் இல்லாத ஆத்மாவில் எவ்விதம் வேற்றுமை உண்டாகும்?

(73)

लिङ्गस्य धारणादेव शिवोऽयं जीवतां व्रजेत् ।
लिङ्गनाशे शिवस्यास्य जीवता वेशताकुतः ॥

லிங்கஸ்ய தாரணாதேவ சிவோऽயம் ஜீவதாம் வ்ரஜேத்।
லிங்கநாசே சிவஸ்யாஸ்ய ஜீவதாவேசதா குத:॥

லிங்க சரீரம் எடுப்பதனால்தானே பரமாத்மா ஜீவாத்மாவாக ஆகிறது. இருக்கட்டும். அந்த லிங்க சரீரம் அழிந்தால் இந்த பரமாத்மா ஜீவாத்மாவாக ஆவது எப்படி?

(74)

शिव एव सदा जीवो जीव एव सदा शिवः।
वेत्त्यैक्यमनयोर्यस्तु स आत्मज्ञो न चेतरः॥

சிவஏவ ஸதாஜீவோ ஜீவஏவ ஸதாசிவ:।
வேத்யைக்யமநயோர்யஸ்து ஸ ஆத்மஜ்ஞோ ந சேதர:॥

பரமாத்மாவே ஜீவாத்மா, ஜீமாத்மாதான் பரமாத்மா. இவ்வாறு ஜீவாத்மா - பரமாத்மாக்களின் ஒற்றுமையை அறிபவன் தான் ஆத்மஞானி; வேறு எவருமில்லை.

(75)

क्षीरयोगाद्यथानीरं क्षीरवद्दृश्यते मृषा।
आत्मयोगादनात्मायमात्मवद् दृश्यते तथा॥

க்ஷீரயோகாத்யதா நீரம் க்ஷீரவத் த்ருச்யதேம்ருஷா।
ஆத்மயோகாத் அநாத்மா஽யம் ஆத்மவத் த்ருச்யதே ததா॥

தண்ணீர் பாலோடு சேர்ந்தால் பால் போல் பொய்யாக தென்படுகிறது. அதுபோல் ஆத்மாவுடன் சேர்ந்த அநாத்மாவும் ஆத்மா போல் காண்கிறது.

(76)

नीरात् क्षीरं पृथक्कृत्य हंसो भवति नान्यथा।
स्थूलादेः स्वं पृथक्कृत्य मुक्तो भवति नान्यथा॥

நீராத் க்ஷீரம் ப்ருதக் க்ருத்ய ஹம்ஸோ பவதி நான்யதா।
ஸ்தூலாதே: ஸ்வம்ப்ருதக் க்ருத்ய முக்தோ பவதி
நான்யதா॥

தண்ணீரிலிருந்து பாலைப் பிரித்து வைத்தால்தான் 'ஹம்ஸம்' (அன்னம்) எனப்படுகிறது. அதுபோல், ஸ்தூலத்திலிருந்து ஆத்மாவை பிரித்தால்தான் முக்தனாக (வீடுபேறு பெற்றவன்) ஆகிறான்.

(77)

क्षीरनीरविवेकज्ञो हंस एव न चेतरः।
आत्मानात्मविवेकज्ञो यतिरेव न चेतरः॥

க்ஷீரநீர விவேகஜ்ஞோ ஹம்ஸ ஏவ நசேதர:।
ஆத்மாநாத்ம விவேக ஜ்ஞோ யதிரேவ நசேதர:॥

பாலையும் தண்ணீரையும் பகுத்தறிவது அன்னப் பறவையேயன்றி. மற்றவரில்லை. அதுபோல் ஆத்மா - அநாத்மா என்று பகுத்தறிய தகுதி பெற்றவனே ஸந்நியாசி மற்றவரில்லை.

(78)

अध्यस्त चोरजः स्थाणोर्विकारः स्यान्नहिक्कचित् ।
नात्मनो निर्विकारस्य विकारो विश्वजस्तथा ॥

அத்யஸ்த சோரஜ: ஸ்தாணோ: விகார: ஸ்யாத் நஹிக்வசித்।
நாத்மநோ நிர்விகாரஸ்ய விகாரோ விச்வஜஸ்ததா॥

தூணை இருட்டில் பார்க்கும்போது 'திருடனோ' என திகைப்பு உண்டாகிறது. இது முற்றிலும் அத்யாஸத்தினால் ஏற்படுவதே. இங்கு திருடனால் ஏற்படும் மாறுதல் தூணிற்கு ஏற்படுவதில்லையே. அதுபோல் மாறுதலே இல்லாத ஆத்மாவிற்கு 'ஜகத்' மூலம் ஏற்படும் விகாரம் ஏற்பட நியாயமில்லை.

(79)

ज्ञाते स्थाणौ कुतश्चोरश्चोराभावे भयं कुतः ।
ज्ञाते स्वस्मिन्कुतो विश्वं विश्वाभावे कुतोऽखिलम् ॥

ஜ்ஞாதே ஸ்தாணௌ குதஸ்சோர: சோராபாவே பயம்குத:।
ஜ்ஞாதேஸ்வஸ்மின் குதோவிச்வம் விச்வாபாவே குதோऽகிலம்॥

'தூண்' என்பது தெளிந்து தெரிந்து விட்டால் 'திருடன்' எண்ணம் அற்றுப்போகும். திருடன் இல்லையென்றால் பயம் ஏது? அதுபோல் ஆத்மஜ்ஞானம் உண்டானபின் உலகம் ஏது? உலக எண்ணம் இல்லையெனில் மற்ற த்வந்த்வாதிகள் இல்லாமல்தானே போகும்.

(80)

गुणवृत्तित्रयं भाति परस्परविलक्षणम् ।
सत्यात्मलक्षणे यस्मिन्स एवाहं निरंशकः ॥

குண வ்ருத்தித்ரயம் பாதி பரஸ்பரவிலக்ஷணம் ।
ஸத்யாத் மலக்ஷணே யஸ்மின் ஸ ஏவாஹம் நிரம்சகம் ॥

ஒன்றுக்கொன்று மாறுபட்ட நிலையுள்ள மூன்று குணங்களின் இயக்கம், ஸத்யமானது என்றிருக்கும் ஆத்மாவில் அமைகிறது. ஆனால் அந்த ஆத்மா பகுக்க முடியாதது.

(81)

देहत्रयमिदं भाति यस्मिन् ब्रह्मणि सत्यवत् ।
तदेवाहं परं ब्रह्म देहत्रयविलक्षणः ॥

தேஹத்ரயமிதம் பாதி யஸ்மின் ப்ரஹ்மணி ஸத்யவத் ।
ததேவாஹம் பரம்ப்ரஹ்ம தேஹத்ரய விலக்ஷண: ॥

எந்த ப்ரஹ்மத்தைச்சார்ந்து இந்த ஸ்தூலே - சூஷ்ம - காரண சரீரங்கள் உண்மையானதுபோல் தெரிகிறதோ அதே பரப்ரஹ்ம மாகவே ஆத்மா உள்ளது. ஆனால் அம்மூன்று சரீரங்களுக்கு அப்பாற்பட்டது ஆத்மா.

(82)

जाग्रदादित्रयं यस्मिन् प्रत्यगात्मनि सत्यवत् ।
स एवाहं परं ब्रह्म जाग्रदादिविलक्षणः ॥

ஜாக்ரதாதித்ரயம் யஸ்மின் ப்ரத்யகாத்மநி ஸத்யவத் ।
ஸ ஏவாஹம் பரம் ப்ரஹ்ம ஜாக்ரதாதி விலக்ஷண: ॥

அந்தராத்மாவில் ஜாக்ரத் - ஸ்வப்ன - ஸுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகள் உண்மையானது போல் தோற்றமளித்தாலும், அம்மூன்று அவஸ்தைகளுக்கப்பால் இருக்கும் ஆத்மாவே பரப்ரஹ்மம்.

(83)

विश्वादिकत्रयं यस्मिन्परमात्मनि सत्यवत् ।
स एव परमात्माहं विश्वादिकविलक्षणः ॥

விச்வாதிகத்ரயம் யஸ்மின் பரமாத்மநி ஸத்யவத்।
ஸ ஏவ பரமாத்மாऽஹம் விச்வாதிகவிலக்ஷண: ॥

எந்த பரமாத்மாவில் விச்வ - ப்ராஜ்ஞ - தைஜஸம் என்ற மூன்றும் ஸத்யம் போல் தோன்றுகிறதோ அந்த பரமாத்மாவேதான் அஹம்பதவாச்யம். ஆனால் முன்கூறிய விச்வம் முதலியவற்றிற்கு அப்பாற்பட்டவர்.

(84)

विराडादित्रयं भाति यस्मिन् साक्षिणि सत्यवत् ।
स एव सच्चिदानन्दलक्षणोऽहं स्वयंप्रभः ॥

விராடாதித்ரயம் யஸ்மின் பரமாத்மநிஸத்யவத்।
ஸ ஏவ ஸச்சிதானந்த லக்ஷணோऽஹம்ஸ்வயம்ப்ரப: ॥

விராட் முதலிய மூன்றும் எந்த பரமாத்மாவில் ஸத்யமானதுபோல் தோன்றுகிறதோ அதே அந்த ஆத்மாதான் ஸத் - சித் - ஆனந்தம் என்ற குறிப்புடன் தானே ஒளிர்வதாக உள்ளது.

அத்வைதானுபூதி முற்றிற்று

